உ

திருச்சிற்றம்பலம்.



அகண்டபரிபூரண சச்சிதானந்தஸாக்ஷாத்காரமாகிய
பரமசிவனார் பார்வதியாருக்கு உபதேசித்தருளிய

# நிஷ்டானுபூதிமூலம்.

இஃது
திருக்கோவலூர்

## ஆறுமுகசுவாமிகள்

அருளிச்செய்தது.

இதற்குச்
சுத்தஅத்வைதவேதாந்தாசாரியராகிய
திருமூலர்மரபிலெழுந்தருளிய

## முத்திராமப்ரம்மதேசிகரது

மருகரும், அவரது திருக்கூட்டத்துத்தலைவரில்
இளவரசுபட்டம்பெற்றவருமாகிய

## முத்து:கிருஷ்ணப்ரம்மத்தினால்

அவதாரிகைமுதலிய வைந்திலக்கணமாகப் பகுத்து
நூதனமாக அருளிச்செய்யப்பட்ட

## உரையுடன்

ஷை மரபில்விளங்கிய
பாளையம்-ம-௱-ஸ்ரீ- சிதம்பரசெட்டியாரவர்கள்
கேட்டுக்கொண்டபடி
நாராயணபுரம்

## சந்திரையரவர்களால்

முத்தமிழ்விளக்கஅச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

# விளம்பரம்.



இதனாலறிவிப்பது யாதெனில், இப்புத்தகம் வேண்டியவர்கள் சென்னபட்டணம் பெத்துநாயகன்பேட்டை - காசிச்செட்டியார் வீட்டில் இங்கிலீஷ் உபாத்தியாயராயிருக்கும் - குருசாமி முதலியாரிடத்திலும், முத்தியாலு பேட்டை - செங்கழுநீர்ப் பிள்ளையார்கோயிற்றெருவில்-௱௨௧-வது-நெம்பரையுடையவீட்டிலிருக்கும்-நாராயணபுரம்-சந்திரையரிடத்திலும், சாரப்பொதிவையநாயகர் சபைக்குக் காரியத்தலைவர் பெரியப்பர்சுவாமிகளிடத்திலும்-தஞ்சாவூர் பரமபாகவதராகிய இளவரசுபட்டம் ஆறுமுகப்ரம்மத்தினிடத்திலும், விலைகொடுத்து வாங்கிக்கொள்ளலாம்.

இங்ஙனம்.

நா--சந்திரையர்.

இந்நூலுரையிலே காட்டப்பட்ட குறிகள்.



; இம்முளை கூட்டுச்சொல் முதலியவற்றின் பின்னும்,
- இச்சிறுகீற்றுச் சொற்களின் பிரிவுக்குப் பின்னும்,
— இப்பெருங்கீற்றுப் பரிசாரத்துக்குப்பின்னும்,
( ) இவ்விருதலைப்பிறை வருவிக்கப்பட்ட சொற்களுக்கும்,
• இக்குத்து முற்றுச்சொல்லுக்குப் பின்னும்,
[ ] இவ்விருதலைப்பகரந் தாத்பரியத்துக்கும்,
* இத்தாரகை அடியிற்காட்டப்பட்டவற்றிற்கும்,

வைக்கப்பட்டன.



இஃது.

சி--அண்ணாமலைமுதலியாரால்

அச்சடிக்கப்பட்டது.



சென்னபட்டணம். 1911

சாலிவாகனசகாப்தம்-௲௭௭௪-இ-நிகழாநின்ற

விரோதிகிருது௵ மார்கழி௴

# உரைச்சிறப்புப்பாயிரம்.



## நேரிசையாசிரியப்பா.

மணிகிளர்பஃறலைவாளராப்பொறுத்த ... ... ... *
அணிகிளர்வசுந்தரையமர்ந்தமன்பதை ... ... *
மலவிருண்மாற்றுமன்னும்வேதாந்த ... ... ... ... .*
நிலவுசித்தாந்தநிகழ்சமரசநிலை. ... ... ... .... *
ஆயதஞ்சொரூபநிலையறிந்துய்வான் .... ... .... *
ஏயவாதுளத்தினிதெழீஇத்துமைக்கன் .. .... ... *
றருளியதும்பின்னண்டமூடுருவப்... ... ... ... *
பொருவறநிவந்தபுயமெருக்குறமி. .. ... ... ... *
அண்ணாமலையினகத்தெழுந்தருளும் .. ... ... ..*
நண்ணாவினைசகுகைநமசிவாய .. .... ... ... *
குருபரர்காளாய்க்கோவலூர்வரு ..., ... ... ....*
முருகனேராமுருகதேசிகனார் .. ... ... ... ... *
வெண்ணெய்ப்பாறவழும்பெண்ணைமாநதியின் ... *
பாங்கரோவிபம்போற்படிவமலைசவுரு.. .. ... *
தோங்குதிட்டையினுறுமளவையிற்றம் ... ... ...*
பிரம்பொறிவெண்பொடிபெய்யும்பொக்கணம்....*
கரந்திட்டுணர்ந்துகலங்குபுநெஞ்சம் .. ... ... *
அயராவெவ்வடிணமவலகலாது .... .... .... .. *
வயிராகங்கொடுவதிதலைக்கண்ணுறீஇ. ... ... ... .*
ஆரணம்பரசிபகாரணகடவுள் .. .. ... ... *
வெள்ளிவரைபுரைவிடைமேற்றோன்றி ... . ... *
உள்ளநனியுவத்துசவட்பெற்றவர் ... ... ... ...*
முதிருந்தமிழின்மொழிபெயர்த்ததுமாம் .... ...*
நிதிவைப்பனபதிட்டானுபூதி .. .. ... . ... *
சாத்திரமூலமாத்திரையன்றிக் .. ... ... ... ...*
கரையமைதரவுதற்குரையிலாமையோர்த் ... ...*
தாதியீறிலதாயருவாயுருவாய்ச் .. ... ... ... *
சோதியாயகண்டிததுரியாதீதமாய்... ... ... ...*
ஞாதுருஞானஞேயநண்ணுததாய் ... .... .... *
நாதவிந்துவாய்நான்மறையந்தமாய்த் ... .... ..*
தற்பதந்தொம்பதந்தழுவசிபதமாம் ... .... ... *
முப்பதமுடிவாய்முக்குணரகிதமாய்ச் ... ... ...*
செப்புதற்கரிதாய்க்கற்பனைகடந்த ... .. ... ...*
துயிலில்வாழ்பரமன்கருணைகூர்ந்து... .... ... ... *

மயலறுத்தாள்வான்மானிடவுருக்கொடு... ... ... ... *
வந்தெனவணிகர்மரபிடையுதித்துச்... ... ... ...*
சிந்தைபுலன்வழிச்செல்லாதொழுகுநாள் ... ... *
ஆதிபுரிவடிவம்பிகையோடினுற்... ... .... ... ..*
மேருதியமதெண்ணியாய்போதயனுளத்ததி... ... .*
மைந்தர்நால்வர்க்கும்வடநிழற்கண்ணிருந் .. .... *
துண்மைதெரித்தவண்ணலடியார் .. ... .... ... *
எழுவருளொருவனொனுந்திருமூலர்... ... ... ... *
வழுவறுமரபினேர்தொழுதகுமாண்டகை .. *
குருமூர்த்தமதாய்த்தெரிவுறப்போந்து... ... ...*
சச்சிதானந்தத்தனிநிலைபகர ... ... ... ... *
நிச்சயந்தெளிந்துநிருவிகற்பமாம்... ... ... ....*
வாய்மைசான்முத்திராமப்பிரமம்... .... .. ...*
தொண்டர்கடன்னைத்தோத்திரித்துரைத்த.... ... .*
கொண்டசுவைகெழுகுருதோத்திரத்திற் ... ... *
குறையெழுதியதன்மருகனைநோக்கிப்... ... ... *
புத்தியுவகைப்புணரிதிளைப்ப... ... ... -... *
முத்துறப்பிரமதிட்டைமுயன்றோர் ... ... ... *
பற்பலர்களுக்குமினிப்பயில்பவர்க்கும்... .... ...*
அற்புதந்தரநல்லஞ்சனமேய்ப்பத் ... ... . .... *
தெளிவாயொருரைசெய்திடுகென்ற ... ... ... *
அளியாலவையுரைசிரமேற்றாங்கி... ... ... ... .*
நவையிலோர்மொழியாலவையுமொழிவுறும்....*
வகையுமதுகைவயஞ்செயற்குரிய ... ... ... ...*
தகைகொளாதனபூதச்சாதனங்களுமெய்ச்... ... *
சாதகசாத்திரர்தந்நெறிகளுமவர் ... .... ... ...*
எதமறவுறுநாதானந்தமும் ... ... ... .... *
அதனைச்சிந்தியாதந்நிலைகடந்தாற் ... ... ... *
சிதைவிலத்துவிதவநுபவசித்தி... ... ... ... *
அடைவுமைந்தெழுத்துமவற்றைச்செவித்தோர்...*
படருமலபரிபாகம்பெறுகையும் ... ... ... *
பிறவுங்கைக்கனியுறழப்புலப்படப்... ... ... ... *
போற்றுறுகருத்துப்பொழிப்பொடகலம் .. ... *
தாற்பரியாத்தமுதாரணமமைய ... ... ... *
உணர்வுடையவர்களுறையும்பதியினை ... ... ... *
அணுகியுமறியாவாதர்கடாமும் ... ... ... ... *
தத்துவஞானந்தலைசிறந்திடவும் ... ... .... .*

மித்தையாம்வாழ்க்கைப்பெத்தத்தழுந்துநர் ... ... *
முற்றத்துறக்குபுமுத்தராகவும் ... ... .. ... *
பற்றறுத்தவரெலாம்வியந்துபழிச்சவும் .. ... *
அறம்பொருளின்பமூற்றியபதத்தின் ... ... ... ... *
சிறந்தவீடென்னுஞ்செல்வம்பெட்ட ... ... ... *
அதிகாரிகளுமையந்திரிபறச் ... ... ... ... ... ... *
சதிராத்தந்நிலைகண்டுசாரவும் ... ... ... ... ... *
வாசிட்டம்முதல்வருவேதாந்தநூல் ... ... ... ... *
ஆசில்சித்தியாராஞ்சித்தாந்தநூல் ... ... ... ... *
பலவற்றிற்குமலைவொன்றிலதா ... ... ... ... ... *
உன்னுஞ்சுருதியுத்தியநுபவம் ... ... ... ... ... *
என்னுமிம்மூன்றுந்தழீஇவகுத்தனன் ... ... ... *
ஆயிரண்டகவையினருளானந்தப் .. ... ... ... *
பேறுவேட்டுப்பேதமின்ஞான ... .. ... ... ... *
சாத்திரம்பயின்றுதன்மாதுலனும் ... ... ... *
ஏத்துநன்மூத்துராமப்பிரமம் ... ... ... ... *
ஞானாசிரியனாய்விளங்குதனாடி ... ... ... ... ... *
ஆனாதடுப்பவவனுளமிரங்கி ... ... ... ... ... *
அருளுறப்பெற்றேயப்பரம்பரையை ... ... *
இருளறவளர்க்கவிளவரசாகி ... ... ... ... ... *
மருவுநாளின்மதிவளர்குரவன் ... ... ... ... *
ஒருவித்தென்றிசையொல்லையிற்செல்லக் .. ... *
கறவைபிரிந்தகன்றெனக்கவன்று ... ... ... *
துறவுபூண்டுதுரீஇப்படர்ந்தே ... ... ... . *
ஏனையதலமெலாங்கோதென்றிழித்து ... ... *
மாதிலச்சாரமீதெனமதித்துச் ... ... ... ... *
சாரநகரிற்றன்குருவைக்கமாய் ... ... ... *
ஆரவிளங்கியசந்நிதானமாம் ... ... ... ... *
பொதியநாயகர்பொதுவிற்கந்தப் ... ... ... *
பதிவருசான்றோர்முதலியோர்தம்மால் ... ... ... *
முதற்பட்டத்தின்முனைவனென்று ... ... ... *
விதிக்கப்பட்டுவீறியவுரவோன் ... ... ... *
மாயைத்திமிரமாற்றுஞ்சிற்சுடர் ... ... ... ... *
ஏயப்பவக்கடல்கடத்துமிரும்புணை ... ... .. *
அஞ்ஞானப்பிணியகற்றுமருந்து ... ... ... ... *
மெய்ஞ்ஞானக்கடிவீசுநாண்மலர் ... ... ... *
இருவினைக்காடறவெறிகூர்ங்குடாரம் ... ... *

மருவுபக்குவர்க்குப்பயன்சொரிவான்பசு... ... ... *
மானகங்காரங்கடந்துமாண்புகூர்... ... ... *
மோனவைப்பின்முளைத்தசுரதரு... ... ... *
ஆதாரத்திடராறுந்தாண்டி... ... ... ... ...*
பிரணவத்தொளிர்வெயின்மணிவிளக்கு ... ... *
தாவக்கோடைதணிக்குங்கொண்மூ ... ... .*
ஆவிக்குறுதுணையன்பிற்கன்னை... ... ... ..*
நித்தியநிமலநிருவிகார... .. ... ... .... *
சத்திபநிராமயசமயாதீதம் ...... ... ... ...*
மனுதிக்கெட்டொருவநாதிகாரணம் ... ... *
பின்னுபின்னமுன்னுமொருபொருள்... ... . *
மூலப்பகுதிமுளைத்தலர்ந்தெழுந்து ... ... *
காலப்பகுதிதொடர்ந்துகாணவரு... ... .. .*
பிரமனுநிபிறலிகாந்தமாம்... ... ... ... ..*
சரமசரத்துஞ்சகலாண்டத்தும் .. ... .... ..*
கடலத்தலைபுனற்றுவலைகடுப்ப ... ... ... *
அமைவுறத்தோய்ந்துந்தோயாதாகி... ... ..*
ஒட்டியிம்மெனச்சுட்டப்படாத... ... ... ..*
சர்வசாட்சிதாமனதானும் .. ... ... .. .*
பிரமவாரிதிபடிந்தாடும்பெற்றியோன்... ... ..*
இழுக்கறுபல்கலைத்தானைகொண்டெய்தி... ... *
ஒழுக்கவமைச்சன்சூட்சியினூன்றிக்... ... ... *
காமமாதிக்கடும்பகையிரியத் .... ... ... ...*
தோமிலாமேலோர்மொழிவாளிற்றுமித்துத் .. ....*
துவாதசாந்தப்பெருநகர்தன்னில் ... ... ...*
தவாதசாந்தவத்தாணியிவர்ந்து ... ... ... .*
திருவருளென்னுமொருமுடிகவித்துப் . ... ... *
பண்புடையபேதவெண்குடைநிழற்ற ... ... *
நிறைவுறுதிட்களநேமியுருட்டிக் ... ... ... *
குறைவிலபேரின்பமுறைபுரிகுரிசில் ... ... *
சத்திநிபாதஞ்சார்ந்த ... ... ... ... ... ...*
முத்துக்கிருஷ்ணப்பிரமமெய்தவனே ... ... .*



இவ்வுரைச்சிறப்புப்பாயிரம்.

வித்வசிகாமணியாகிய அஷ்டாவதானம்.

ஸ்ரீ வீராசாமி செட்டியாரவர்களாலியற்றப்பட்டது.

# கடவுள்வணக்கம்.

## கலிவிருத்தம்.

உலகினொடுயிர்பரமுடையவனெவனவன். ... ....*
கலைபகழுயர்க்கனயதுள்னெவனவன் ... ... ... *
நிலவிபமுனிவருணிகழ்பவனெவனவன்... ... ...*
தலைநிறையிறையவனடிதொழுதனமே... ... ... *



## (அருணிறையடிகள்வணக்கம்.)

### எழுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

ஞானமாம்வடிவுகொண்டெழுந்தருளு ... ... ... ... *
நாட்டமூன்றுடையநாயகநன்... .. ... ... *
மோனமாம்விழியைபரித்தெமையாண்டு... ... ... ...*
முத்தியிற்சேர்த்திடுமுதல்வ... ... ... ... ...*
தானமார்மலர்மரபுறுமுத்தி... ... ... ... ... ... *
ராமசற்குருவநின்சரண... ... ... ... ... *
மானகோகனகத்தெனதுளச்சுரும்ப ... ... ... ... *
ரடுத்துறவரமருள்குவையே... ... ... ... ...*.



## (அவையடக்கம்.)

### எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

திகழுமெனதுளத்திலகுஞ்த்திராம... ... ... ... ... *
தேசிகனற்றிருவருளான்மாந்தர்சிந்தைத் ... ... *
துகளறுக்குநிட்டானுபூதிக்கென்னுட் ... ... ... ... *
டோன்றியவாறுரைசெய்தேனதனைக்காணு... ... *
மகிமைகொள்பல்கலைதேர்ந்தோர்சூத்ரதாரி ... ... ... *
மருவுதிரைமறைவுறுகைவசத்தாயாட்டும். ... ...*
வகைகொள்மரப்பாவைநடிப்பதனைக்கண்டு ... ... ....*
மகிழுலகோர்போல்வியந்துமகிழ்வர்மாதோ... ...*

(இதுவுமது.)

அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.

பொருவரியமெய்ஞ்ஞானநிட்டானுபூதியினத் ... *
பொருளைமேயார்தற்... ... ... ... ... *
சூரியனலேனாயினுமென்புன்மதியாலச்சுமகன்....*
றுரைசெய்தேனால்... ... ... .... .... *
அருமைபெறுமுத்தமிழைமுறையாகத்தெரிந்திருக்
குமறிவுசான்றோர்... .. ... ... ... ..*
வருகுழவிசொலுமொழியான்மகிழ்வுறல்போ.....*
லிவ்வுரைக்குமகிழ்வாரன்றே ... .... .... *





இந்நான்கும், இந்நூல்
☞ உரையாசிரியரால்
இயற்றப்பட்டன

சிறப்புப்பாயிரம்
முற்றிற்று.







# சாற்றுகவிகள்.



இஃது - புரசை - அஷ்டாவதானம்.
சபாபதிமுதலியாரவர்களாலியற்றப்பட்டது.



( நேரிசை ஆசிரியப்பா. )

பூமிசைநான்முகப் புனிதனுதிபருந்... ... ...*
தோமறவுணர்ந்து சொலற்கருமாமறை... ......*
முடிவுநூலின் முன்னியதுணிவும் .. ... ... ...*
வடிவறத்தெரிந்து மன்னுவிஞ்ஞான... ... ... .*
பூரணநிசையிற் பொருந்துபுயோக... ... ... *
காரணசமாதி நிட்டைகைகண்டருள்... ... ...*
குரவுககாட்சிக் குறிபிறழாது... .... ... ... *
திரமுறவுட்கொளீஇத் திகழ்முத்திராடீப்... ... .*
பிரமமென்னும் பெயரினோன்மருகனென்... ...*
திருநிலமகிழ்சிறப் பெய்தவன்னோன்பா... ... *
லான்மாமுயற்சி யாவுமொழியாத்... ... ... ...*
தான்மாத்திரமாய்த் திருசுகாதீதத்... ... ... ...*
துட்டமோமயம்போற் போதமென்றயர்ந்து... *
விட்டகேவல விடிவர்நதெளிதி... ... ... ... *
னடைவுறச்சோபா னம்மெனுஞ்சாதனந்... ... *
திடனுறப்பயின்று சிரவணாதிகளிற்... ... ... ...*
கைம்மிக்கனுபவக் களிப்பினோங்கிய... ... ... *
விம்மிதமில்லா விம்மிதமிஃதெனாப்... ... ...*
புலமையோர்கைக்கனி போனனிகாணக் ... .*
கிளர்வுறுமுத்து கிருஷ்ணப்பிரம... .. ... .*
மென்னுநாமத் திருந்திவத்தோன்றல்... ... ...*
புன்மையில்திட்டானுபூதியானூற்குச்... ... ....*
சிந்தாமணிமுதற் செப்புமிலக்கிய .. ... ... .*
நந்தாவரும்பொரு ளவையிலவாக... ... ...*
வகலறுப்ப மாதியவனையா... ... ... ... *
னிகலறப்புலப்படுத் தியம்புதமிழினூர்... ... ....*
நாம்புரிந்திட்டவை தருமவ்வவைக்குரித்... ... .... *
தாம்பரிசென்ன வறிவெனுமளப்பரு... ... ..*

நயனகோசரத்தா னானந்தன்னின் ... ... ... *
மயலுமறுபவ முறையஞ்சனங்கொ... ... ...*
டெவ்வப்புலத்தி னெவ்வப்பொருளுள ... ... *
வவ்வப்படியெலா மாராய்ந்தொருங்கினி ... ... *
தியற்றியவுரையி னினிமையுப்வண்மையு ... ...*
மயக்கறுதிட்பமும் வாய்மைசானுட்பமு... ... *
நோக்கிலர்நாலா நோன்மைசான்மதியின் ... *
றூக்கற்றெருளிர்சத் திரிகைப்பரப்பின்... ... .*
பண்பினைமானு மெனலாங்... ... ... ... .*
கண்கொடுதந்தில காண்பவர்தமக்கே... ... (க)



இஃது - சிதம்பரம்.

இராமலிங்கபிள்ளை அவர்களாலியற்றப்பட்டது.

(எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.)

நலங்கொள்சிவயோகமணநாற்றிசையுமணக்கும்... ... ... *
ஞானமணங்கந்திக்குமோனமணநாறும்... ... ... *
விலங்கலில்சித்தாந்தமணம்பரிமளிக்குமின்பா ... ... ...*
வேதாந்தமணங்கமழும்வேதமணப்வீசும் .. ... ... *
தலங்கொளுமெய்யத்துவிதத்திருமணமும்பரவும்... ... .*
தனிமுத்துக்கிருட்டிணப்பேர்தங்கியநம்பிரமம்... ... *
வலங்கொளுநனிட்டானுபூதியெனுநாற்கே... ... ... *
வாய்மலர்ந்தவுரையெனுமோர்மாமலரினிடத்தே... (உ)



இஃது - சேமங்கலம்வித்துவான்

நாராயணமுதலியார் பாடியது.

(எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.)

பரமசிவனுமையவளுக்குபதேசஞ்செய்யப்... .... .. ... ..*
பரவியசீர்நிட்டானுபூதிதனைப்பார்மேல்... ... .... ...*
திரமருவுகுகைநமசிவாயசருட்டொண்டர்.. ... ... ... ..*
திருக்கோவலாறுமுகதேசிகர்செந்தமிழால்... ... ... *
வரமலிபாடலினெழுதத்திருமலர்மாபில் .. .. ... ... *
வருமுத்திராமப்ரம்மமருகரிளவரசாம் ... ... ... *
உரமிலகுமுத்துகிருஷ்ணப்பிரமமதற்கவதா ... ... ... *
ரிகைபூதலாமுரையெழுதியுலகிலச்சிட்டதுவே. ... (௩)

இஃது - திருநீர்மலை.

கோபாலகிருஷ்ணகவிராஜசேகரர்பாடியது.

(அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.)

குருவடிவாயுமைக்கரன்சொனிஷ்டானுபூதிதனைக்கோவனூர்வாழ்; திருஞானவாறுமுகதேசிகன்செந்தமிழினிற்செய்தானதற்குத், தெருளுறநல்லுரைசெய்தான் திருமூலர்வழிவருமுத்திராமப்ரம்மம, மருகனிளவரசாமேனன் முத்துகிருஷ்ணப்பிரமமெனுமவள்ளிமயானே .. ... ... ... ... ... ......(சு)

---

இஃது - தில்லையம்பூர்ச்

சந்திரசேகரகவிராஜபண்டிதர்பாடியது.

(அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.)

சத்திதனக்கிறைபருளுநிட்டானுபூதிதனைத்தமிழ்ப்பாவாக, எத்திசையும்புகழ்கோவலாறுமுகதேசிகனுரியபினூரச், சுத்தமிகுஞ்செய்யுளுக்குத்திருமூலர்மரபிலிளவரசாகித்தோன்றும், முத்துகிருஷ்ணப்பிரமமுரைவகுத்தனைத்தான்றனையறியுமுறைமபித்ருமேன... ... ... ... ... ... ... ... ... (ரு)

---

இவை - நரசிங்கபுரம்.

தமிழ்ப்புலமை-வீராசாமிமுதலியாரவர்களா

லியற்றப்பட்டன.

(அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.)

அருகுறுமாமலைமகளையரனேக்கியருளியநிட்டானுபூதிக், கொருகுவலயத்துள்ளோரஞ்ஞானமொழித்துய்யவுரைசெட்டானுல் திருதமலமறவேதற் சேர்ந்தோர்க்குச்சிவானுபவந்தெளிபக்காட்டும், பெருகுபுகழ்த்திருமூலர்மரபில்வருமுத்துகிருஷ்ணப்பிரமமாதோ ... ... ... ... ... ... .. (சா)

---

மட்டாருங்கனிநுகர்வார்சுவைத்திறத்தைத்தாமறிதன்மட்டேயன்றி, நட்டாருமுணரவெளிப்படுக்குநர்மற்றில்லையிற்றனுலக்தோர்க்கு, நிட்டானுபூதியெனுங்கனிச்சுவைதானறிந்ததனைநியதியாக உட்டாவவெளியிட்டான் முத்துகிருஷ்ணப்பிரமமெனும்யோகிதானே... ... ... ... ... ... ... ... ... (எ)

இஃது- தாயுமானசுவாமிகள்மரபிலெழுந்தருளிய
எடுத்துக்கூட்டி -அருணாசலசுவாமிகளாலியற்றப்பட்டது.

(அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.)

அரனுமைபாட்குபதேசித்தருளியதன்னிட்டானுபூதிநூலுக், கி ரவிநிலத்திருணீக்கிப்பொருள் விளக்கமெனத்தெளிவாயுலாயிட் டானால்,திரிமலமுஞ்சடேரசட்பாவமுமொழித்த திருமூலநாயனு ர்தம், மரபில்வருமுத்துகிருஷ்ணப்பிரமமெனத்திசைபுகழ்மாத வத்தினனே... ... ... ... ... ... ... ... ... (அ)

இஃது- திருப்போரூர்ச்சிதம்பரசுவாமிகள்ஆதீனம்
ஒன்பதாவதுபட்டம்
முத்துகுமாரசுவாமிகளாலியற்றப்பட்டது.

(அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்)

மருமலிர்தகொன்றைபணியரனுமையாண்மகிழவருள்வாதுளத் திற், பொருண்மலிர்நிஷ்டானுபூதிதனக்கோருலாவையப்புகன் றிட்டானுல், இருண்மலிந்த பவப்பணிபிணிகளுமானவரின்பச் சலதிதோயத், தெருண்மூலர்மரபிலவருமுத்துகிருஷ்ணப்பிரம மெனுந்தேவன்மாதோ ... .. ... ... ... ... (கூ)

இஃது- குளத்தூர்
காதலமூர்த்தியாகிய சட்டநாதசுவாமிகளாலியற்றப்பட்டது.

(அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.)

நீர்நிறைந்தவண்டமெல்லாநின்றபரிபூரணத்தினிலைமைநோ க்கி, ஆர்நிறைந்தசிவனுமைபாட்கருளியதன்னிட்டானுபூதிநூலு க்,கேர்நிறைந்தமுத்துகிருஷ்ணப்பிரமமெனுமெம்பெருமானிர ங்கியன்பாய்ப்,பார்நிறைந்தவடியார்களுளங்களிதத்துப்பரவவுரை பகர்ந்தான்மன்னோ... ... ... ... ... ... ... ... ... ...(ய)

இஃது-திருவாரூர்ச்சிவனடியார்திருக்கூட்டத்தி
லொருவராகிய சேங்காலிபுரம்
கோயிற்பத்து குழந்தைவேலு ஓதுவாரவர்களா
லியற்றப்பட்டது.

(அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.)

திட்டானுபூதியுமாமுத்துகிருஷ்ணப்பிரமநிகழ்த்தமோன.

மெட்டாததேவர்முதன் முனிவர்சித்தர்மானிடர்மற் றேனையோர்
க்குந், சுட்டாமற்றுன் றுதற்குச்சமரசவானந்தவெள்ளந்தொட
ர்ந்ததோங்கிக், கட்டானதொடர்பெல்லாங்களைந்தத்துவிதநிலையு
ங்கலந்ததம்மா... ... ... ... ... ... ... ... (௰௧)

இஃது - தி - இ - கரபாத்திரசுவாமிகள்
ஆதினத்திற்குரிய பிறைசை - அருணாசலசுவாமிகள்
மாணாக்கராகிய - கா - மருகேசநாயகரவர்களாலியற்றப்பட்டது.
(பதினான்குசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.)

நீர்மருவுமேவணிசிகமெழுந்தைபாருமையம்மைநெஞ்சமகிழ்வுறவு
னைத்த, நிட்டானுபூதிநலவிளக்கமமறுமெய்ஞ்ஞானநெறிநிறுத்ப
யன்றெரிந்திப், பார்மருவுமறிவினருமறியாருமேபளிதினிற்பகர்க
ராமலகமெனப், பரிவினிலுணர்ந்துவாய்ஞானநீகிப்பெரும்பர
நிட்டைபடையவெண்ணிப், பேர்மருவும்மற்கோளிம்முறைகொவகு
த்ததாற்பெருமைபெறுமுத்திராயப், பிரமமாமொருகுருவின
டிநீழலனுதினம்பிரியாதுநின்றிலங்கும், சீர்மருவுதக்ஷணமூர்த்
தமறைமுனிவர்புகழ்திருமூலர்மரபில்வந்த, திவ்யமுத்துக்கிருஷ்
ணபிரமமென்றெவர்களுஞ்சிந்திக்குமுயரடிகளே... ...(௰௨)

# இந்நூலுரையாசிரியரது

திருக்கூட்டத்தாராலமகிழ்ந்துரைக்கப்பட்டன.

இஃது - சென்னமாநகரத்துள்ள
திருக்கூட்டத்தாரிலொருவராகிய இங்கிலீஷ் உபாத்தியாயர்
மயிலை - குருசாமிமுதலியாரவர்களாலியற்றப்பட்டது.
(பதினான்குசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.)

வாதவூரர்க்குப்பெருந்துறையினிற்குருந்தமரவடியினிற்றேசிகவ
டிவாகிவந்தருளிமகிமைபெறுசிவஞானபோதமெனுமுறைவழ
ங்கும், ஆதியேயருளொடிந்நாள்சென்னைமுத்துகிருஷ்ணப்பிர
மமெனவவதரித், தவனிதனிலெவருங்கடைத்தேறும்வண்ணநிட்
டானுபூதிப்பெயர்பெறும், கோதிலாஞானநூற் குரையெழுதி
மேற்கோளுடன்கொடுத்தருளியத்தன், குலவுநிதரிசனப்ரமாண
மாயிலதுறுங்குறைவிலாப்பெருமைதனையும், ஆதனேனையுமுற்
றுமுட்கொண்டுதனியத்வைதானந்தமேற்சேர்த்திடு, மதனிரக்க
த்தையுஞ்சொலவுரகனுக்குமரிதாகில்யானென்சொல்கேனே...*

இஃது- தஞ்சைமாநகரத்துள்ள
திருக்கூட்டத்தில் இளவரசுபட்டம்பெற்ற
ஆறுமுகப்ரம்மத்தினு லியற்றப்பட்டது.
(பதினான்குசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.)

அலகில்வேதாந்தசித்தாந்தநிலைகட்கெலாமமருநிலைமிதெனவே யருளுமென் றனைமேகட்க வன்னைஞங்களிகொண்டமறைநதநிட் டாலயூதிக், கிலகுஞ்சுவாநுபூதிக்கிலசையவின்பவுசா யிட்டனன் புலவர்ோத, மேமமுதன்மேவாசையும்மொழித்திவ்வடிவிலெனை யாளவந்தபெருமான், நிலவுமேலோர்கள்புகழ் திருமூலர் மரபி லெழுநிமலன்மனவாக்கிலெட்டா, நிகரிலாச் சிவமேயாக நிட்டை யைப்புனிதர்க்குநெறியோடுணர்த்துபெரியோன், உலகிலனைத் தையுமகண்டபரிபூரணசொரூபமாயுன்றுகின்ற, வொப்பற்ற முத்துகிருஷ்ணப்பிரமகுரவனுமுணர்வரியமானுபவனே (௰௪)

இஃது- ஷையூரில் பாரம்பரைச்சீடரி லொருவராகிய
இ-குப்புசுவாமிநாயகரவர்களாலியற்றப்பட்டது.
(அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.)

அத்தனார்தமைப்பணிந்துமலை மகள்மேட்கப்புகலிட்டானுபூதிக், கித்தரணியோர்களடையிருண்மயக்கமகலவவர்க்கிரவிபோன்று முத்திநிலைபருண்மூலர்மரபிலெழுமுத்துகிருஷ்ணப்பிரமவள்ளல் முத்தமிழ்த்தேர்மூதறிவோர்பரவவுலாப்பயனெடுத்து மொழிந் [தான்மன்னே

இஃது -கொங்குநாடிப்பட்டிணுள்ள
திருக்கூட்டத்துத்தலைவராகிய தமிழ்ப்பள்ளிக்கூடத்து
உபாத்தியாயர்-அ-சேஷிப்பிள்ளை அவர்களா
லியற்றப்பட்டது.
(பதினான்குசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.)

அத்தனடியிற்றெழு தமுத்திபெறு நெறியினவு மம்பிகைக்ககம கிழ்ந்தே, யவனருளுநிட்டைபைக் குனகநமசிவாயருக்கன்பினெ ன்றுலகுபுகழும், பத்தியுளவாறுமுகதேசிகன் செந்தமிழ்ப்பாவி னலருள்புரிந்தான், பண்டுபயவாரியை மதிந்தமுது கண்ணன்ப பகிர்ந்தமெனவிந்நாளிலே, இத்தலத்தியாவர்க்குமந் நூலினமுதை யமுதமின்புறமதித்தளித்தா, னெழில்மூலர்மரபினுயர் தசுஷணா மூர்த்தமெனவெனதுசற்குருவாகியே, நித்தநிட்களசகளரகித சிற்பாவமலநிலையருள்புரிந்தயோன, நிமலநிர்க்குணவகண்டாகா ரமுத்துகிருஷ்ணப்பிரமமென்னுநிதியே... ... ... ... (௰௫)

இஃது-ஷை யூரில் திருக்கூட்டத்தி லொருவராகிய
தமிழ்ப்பள்ளிக்கூடம்-கோவிந்த உபாத்தியாயரவர்களா
லியற்றப்பட்டது.

(எழுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.)

எட்டாதபேரின்பவீட்டினுக்கேறுதுறையிஃதென்றுபெரியோ
ரெலாங், கட்டாகமொழிகின்றநிட்டானுபூதிக்கொர் கதிரவன்கங்
குலிலல்லா, மட்டாமெனைப்புவியிலொப்பிலாமுத்துகிருஷ்ணப்
பிரமவள்ளல்வினைவற், றொட்டாமலையாண்ட சின்மயநபாதி
தியுரைத்தவுரையுரைகளாமே... ... ... ... ... ... (௰௭)



இஃது-ஷை யூரில் திருக்கூட்டத்தி லொருவராகிய
தாணப்பகவுணரவர்களா லியற்றப்பட்டது.

(கட்டளைக்கலித்துறை.)

அருளானவீசனு நம்பிலகைக்கோதுமரியநிட்டை ... ... ... ❋
பரிவாகவாறுமுகதேவன்செந்தமிழ்ப்பாவிற்செய்தான்... ...❋
குருவாயெழுந்தருண் முத்துகிருஷ்ணானந்தகோதில்குணன்....❋
விரிவாயதற்குரையிட்டானெவரும்வியப்புறவே .. ... (௰௮)

இஃது-சாரத்திலுள்ள திருக்கூடத்துத் தலைவராயும்
பொதியநாயகர்சபையின் பூசாவிதியை நடாத்துகின்றவராயும்
விளங்கிய -சின்னப்பாவுமூர்த்தியாரவர்களா
லியற்றப்பட்டது.

(எண்சீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்.)

நன்னலருங்கயிலைபுரைபரமனந்நா ணகமகட்குத்தாணருணிட்
டானுபூதித், தண்ணளிபாட்டயர்வாவிசூழுங்கோவலாறுமுகத்தத்
கோனென்றியற்பேர்தாங்கிக், கண்ணியவான்றமிழ்க்கவியாற்ற
ளாத்திற்நாளிற்கைக்கனிபோற் சிவநிட்டை கற்போர்காணப்,பு
ண்ணியஞ்சேர் சென்னைவளர் முத்து கிருஷ்ணப் பிரமமெனப்
போந்துரையைப்புகன்றானம்மா... ... ... ... ... ... (௰௯)



இஃது-ஷை யூரில்பொதியநாயகர் சபைக்குத்தருமகர்த்தா
நாராயணப்ரம்மத்தினாலியற்றப்பட்டது.

(நேரிசைவெண்பா.)

இத்தரணியோரெல்லாமின்பவீடெய்துவான்.....❋
முத்துகிருஷ்ணப்பிரமமுன்னோனே - சத்தான...❋
நிட்டானுபூதியெனுநேரினூலுக்குரையைத் ..-...❋
திட்டாந்தத்தோடுரைத்தான்றேர்ந்து... ......(௨௰)

சாற்றுகவிகள் முற்றுப்பெற்றன.

உதாரணசாத்திரங்களின்பெயர்களாவது.

அகஸ்தியமுனிவர் *
அதிரகசியம்...... *
அத்துவிதக் கலிவெண்பா..... ..
அத்துவிதானுபவம்
அத்துவிதவுண்மை
அமுதசாரம்...... *
அருட்பிரகாசம்... *
அருணகிரியந்தாதி
அவிரோதவுந்தியார்
இருபாவிருபஃது... *
உடலறிவிளக்கம்.. *
உண்மைநெறி விளக்கம். ... ... *
உண்மை விளக்கஞ்சிந்தனை ... *
உபநிடதம்....... *
ஒழிவிலொடுக்கம் *
ஔவைக்குறள் .. *
கடவுளந்தாதி.... *
கண்ணுடைவள்ளல்.
கந்தரலங்காரம் .. *
கந்தரனுபூதி....... *
கலிமடல்...... .. *
காரைக்காலம்மையந்தாதி.. *
குகைநமசிவாயர். *
குருநமசிவாயர்.. *
கைவல்ய நவநீதம் *
சசிவன்னபோதம்
சச்சிதானந்த விளக்கம் .. ... *
சந்திநிமுறை..... *
சிவஞானசித்தியார்,
சிவஞானதீபம்... *
சிவநெறிப்பிரகாச.

சிவப்பிரகாசம்... *
சிவபோகசாரம்... *
சிவவாக்கியர்.. .. *
சிவானந்தமாலை... *
சிற்றம்பலநாடிகளனுபூதிவிளக்க
சிற்றம்பலநாடிகள் கலித்துறை *
செலகாலத்திரங்கல்
சைவசமயநெறி.. *
சொரூபசாரம் .. *
சொரூபத்தந்தாதி,
சௌந்தரியந்தாதி
சௌந்தரியலகிரி. *
ஞானசுகாதீத வெண்பா...... *
ஞானவாசிட்டம்... *
ஞானிகள்நிலைமை *
தத்துவராயசுவாமிகள்......... *
தத்துவாமிர்தம்.. *
தாயுமானசுவாமிக
திருக்கருவைப்பதிற்றுப்பத்தந்தா
திருக்களிற்றுப்படியார்... ... *
திருநாவுக்கரையர் *
திருப்புகழ் ...... *
திருமந்திரம்..... *
திருவம்மானை..... *
திருவருட்பயன்... *
திருவள்ளுவர்..... *
திருவாசகம்...... *
திருவாய்மொழி.. *
திருவிளையாடல்... *
தேவாரம்......... *

தேவிகாலோத்தரம் *
நாலடியார்... .... *
நிகழ்காலத்திரங்கல்.
நெஞ்சொடுமகிழ்ந்த
பகவற்கீதை ..... *
பசுபதிபாசவிளக்க
பஞ்சாக்கரப்பதி பசுபாசவிளக்கம்
பட்டணத்துப்பிள்ளையார் .. .. *
பதார்த்ததீபிகை *
பத்ரகிரியார் ...... *
பரணதேவரந்தாதி
பாடுதுறை....... *
பாரதம் ........ *
பாலானந்தசுவாமிகள்..... *
பிரமகீதை........ *
பெரியபுராணம்.. *
போற்றிப்பஃறொடைவெண்பா
ப்ரபுலிங்கலீலை .. *
ப்ரம்மோத்திரகாண்டம். .. *
மஹாவாக்யம்... *
மவுனதரிசனம்.. *
மோகவதைப்பரணி
ரிபுகீதை ....... *
வருங்காலத்திரங்கல்,
வாதவூரர்புராணம்,
வீராகமம்....... *
வைராக்பசதகம்... *
வைராக்யதீபம்... *
வைராக்யமீதாத்திரம்..... *

ஆ-கூய.

உ



ஸ்ரீஸத்குரவேநம:

# நிஷ்டானுபூதி.

காப்பு.

## அவதாரிகை.

சிவஞானநிஷ்டையில்- வல்லமையுடைய-இந்நூலாசிரியர்- தத்வமஸி என்னும் - சாமவேத மகாவாக்யார்த்தமாகிய - உத்தரவாதுளம்- என்கின்ற- ஆகமத்திலுள்ள- நிஷ்டானுபூதியினால் தாமடைந்த- சுவானுபவத்தை -ஆத்மகோடிகள்- எளிதில் உணர்ந்தடைந்து- ஆனந்தாதீத மாகும்பொருட்டு - அருளினால்-தமிழ்ச்செய்யுளில்- சொல்லப்புகுந்து- இதுநிறைவேறும்படி - எல்லாவற்றிற்கும்-மூதற்காரணமாயுள்ள-ப்ரணவஸ்வரூபத்தைச்சகுணமாகவும்- நிர்க்குணமாகவும்-துதிசெய்கின்றார். - *

அத்திமுகனடிநித்தநினைபவர்.........................*
சித்திதிருவொடுமுத்திபெறுவரோ..............*

(இதன்பொருள்.)

யானைமுகத்தை யுடைய- விநாயகமூர்த்தியினது பாதத்தைத்தினந்தோறும் (திரிகரண சுத்தியாய்) அகத்தின்கண்ணே- தியானிக்கின்றவர்கள் - இலக்ஷ்மீகரத்துடன் விளங்கிய - சித்திகளும்- (ஞானவாழ்வாகிய) மோக்ஷசெல்வமும் - அடைவார்கள்.—என்றவாறு. ஏகாரம்-ஈற்றசை.

(பதசாரம்.)

எதிரில்லாமல் - சகலமூந் தன்மயமாக விளங்கும்- ப்ரணவஸ்வரூபத்தை - மதங்கொண்டு சஞ்சரிக்கும்- ஆண்யானையென்பார்.

அத்திமுகனென்றும், அப்பிரணவ ஸ்வரூபத்தின் தாளைச் சதா நிஷ்டாரகக்கூடிவிளங்கும் மஹாத்துக்களென்பார்—அடிநித்தநி னைபவனொன்றும், சகலசாம்பராஜ்யத்தோடும் விளங்கிய-அஷ்ட மாசித்திகளென்பார்— சித்திதிருவொடு என்றும், இரண்டறக்க லக்கின்ற முத்திக்கதிகாரிகளென்பார்.—முத்திபெறுவனொன்றுங் கூறினர்.

(இருவுமது.)

சகலமுந் தானாகிய - ப்ரணவஸ்வரூபம் - பரிபாகருடைய குறிப்பின்வழியே செல்லத்தக்க தாகையால் -பாகருடையகுறிப் பின்வழிச் செல்லும்யானையென்பார்— அத்திமுகனென்றார் என வும், ஆணவாதி மதங்களைப் பொழியும் கஜமுகாசுரனை அழிப்ப தற்கு -வேழவதனங்கொண்டு எழுந்தருளிய கணேசனென்பார்— அத்திமுகனென்றார் எனவும் சித்திமுத்திகள் விளைகின்ற சிவான ந்த பூமியாகிய - ப்ரணவ ஸ்வரூபத்தைச் சுருதியுத்தி அநுபவத் தாற் காணக்கூடாமையால் சுருதிகுருசுவாநுபவத்தாற்கண்டறி ந்து-அடைகின்றமேலான சத்துக்களென்பார்—சித்திதிருவொடு முத்திபெறுவனொன்றார். எனவும் கூறுவாருமுளர்.

[இதன்தாத்பரியம்.]

அக்ஷர ஸ்வரூபங்களில் முதலெழுத்தென்றும், சர்வஆன் மாக்களுள்ளும்- ப்ரகாசிக்கின்ற -சித்ரூபமென்றும், சுஷுமுனை யென்றும், ப்ரம்ம ரந்திர மென்றும், நிர்க்ரூப மென்றும், பஞ் சவர்னத் தழகுள்ள தென்றும், மாணிக்க வொளிபோன்றதென் றும், சின்மாத்ர சொரூபமென்றும், ஞானசூரிய னுதிப்பதற்கு மேருவென்றும், ப்ரம்ம சந்நிதானத்தில் தோன்றிய மாயாவி னோதமான சகத்விளையாட்டைப் பார்ப்பதற்குப் புருஷாகாரி லையப் போலநின்ற ரூபாரூப மென்றும், சத்துச்சித்து ஆனந்த மென்றும், இன்னும் பலவாறாக -வேதாகமங்களினுற் கூறப்பட் டதென்றும், சொல்ல-விளங்கிய, ப்ரணவஸ்வரூபத்தை ஞானுசி ரியால்- விசாரித் தடைந்தவர்கள்- சர்வசித்தி முத்திகளைப்பெற் றுச் சாக்ஷாத்கார மாவனென்பதாம்.

(அஷ்டமாசித்தியும்,அவற்றின் விபரமுமாவன) அணிமா,மிக வுஞ்சிறிய வுயிர்தோறும்- பரமகாஷ்டையாய்ச் சென்றிருத்தல். மகிமா, மிகவும் உயர்ந்த மகமேருவைப்போல ஆகவேண்டுமெ னில் ஆதல். இலகிமா, மேருபாரத்தையொத்த யோகியை எடுத் தால்- இலேசா யிருத்தல். கரிமா, அணுப்போ லிருக்கும் யோகி

யை எடுத்தால்- மேருபாரமா யிருத்தல். பிராப்தி, எவ்வுலகத்தி னுந் தடையறச் சஞ்சரித்தல். பிராகாமியம், பரகாயப் பிரவே சம்பன்னுதலும்- அந்தரசஞ்சாரஞ்செய்தலும்- இச்சித்தபோ கம் அனுபவித்தலும்- மண்ணில் விண்ணில் உள்ள பொருள்களை யும் முக்காலங்களையுந் தனது தேககாந்தியால் அறிதலுமாம். ஈசத்துவம், ஸர்வேஸ்வரனைப்போலத் தன்னிச்சை வழியில் முத் தொழிலுஞ்செய்து- சூரியன்முதலிய கோள்கள் தன் எவல்கேட் கவிளங்குதல், வசித்துவம், தேவர்முதலிய உயிர்களையும் எல்லா வுலகங்களையுந் தன்வசமாகக் கொள்ளுதல்.

இரண்டறக் கலத்தலாவது, சுருதிகுருசத்யுக்திகளால் தன்னைச் சாக்ஷிமாத்ரமாய் அறிந்தபடியே ஏகமான தன்ஸ்வரூபத்தைச் சுத்தப்ரம்மமாகச் சுவானுபவத்தாற்கண்டு தனக்கு அன்னிய மாய்த்தோற்றிய தேகாதிகளைத் தன்னைவிட வேறே இல்லையென் றும், அப்படித்தோற்றுகிறது பொய்யென்றும், அறிந்தசித்தவி ர்த்தியைச் சின்மாத்ரத்தில்- ஐக்யம்பண்ணி - அவ்வைக்ய மென் கிற கிஞ்சித் இருப்பாகிய அறிவுந் தானே என்று அறிந்து- கேவ லரூபமாய்த் துவிதமறக் கலந்து விளங்குவதாம்.

அஷ்டமாசித்தியென்பதற்குப்பிரமாணம்.
(திருவிளையாடல்.)

அறவுஞ்சிறியவுயிர்தொறுந்தான்பரமகாட்டையணுவாய்ச்சென்
றுறையுஞ்சிறுமையணிமாவாமுவரிஞாலமுதன்மேலென்.....*
றறையுஞ்சிவாந்தமாறாறுமுள்ளும்புறனுமகலாதே...........*
நிறையும்பெருமைதனையன்றேமகிமாவென்னுநிரம்பியநூல்.*

இலகுமேருபாரம்போலிருக்கும்யோகிதனையெடுத்தால்......*
இலகுவானதூலமெனவிருப்பதிலகிமாவாகும்... ..... .....*
இலகுவானபரவணுப்போலிருக்கும்யோகிதனையெடுத்தால்...*
இலகுமேருபாரமெனவிருப்பதன்றேகரிமாவாம்..........*

பிலத்திலிருந்தோனயனுலகிற்புகுதன்மீண்டுபிலமடைதல்....*
பலத்தின்மிகுந்தபிராத்தியதாம்பரகாயத்தினண்ணுதல்வான்,*
புலத்தினியங்கலிச்சித்தபோகமனைத்துந்தானிருக்குந்.........*
தலத்தினினைந்தபடிவருதல்பிராகாமியமாந்தவக்கொடியீர்....*

விண்ணிலிரவிதன்னுடம்பின்வெயிலாலனைத்தும்விளங்குதல்போ
ல்,மண்ணிலுளவாம்பொருள்பலவுங்காலமூன்றும்வானத்தின்..*

கண்ணிலுள்ளவாம்பொருளுந்தன்காயத்தொளியாலிருந்தறிதல்..*
எண்ணிலிதுவுமறையொருசார்பிராகாமியமென்றியம்புமால்.*

ஈசனெனமுத்தொழிலுர்தன்னிச்சைவழிசெய்தெழுபுரவித்...*
தேசன்முதற்கோள்பணிகேட்பத்திகழ்வதீசத்துவமாகும்......*
பூசலவுணர்புள்விலங்கு பூதமனிதர் முதலுலகும்......... .....*
வாசவாதியெண்மருத்தன்வசமாக்கொள்கைவசித்துவமாம்....*

என்று வரும் மற்றும்வருவனவற்றுற்காண்க.

இரண்டறக்கலத்தலென்பதற்குப் பிரமாணம்.

(மஹாவாக்கியம்.)

இவையுணருமிடத்தைக்யமென்றுவிதமுறைப்படுமோதென்றாலவ்வ
றிவேபூரணமாயிருத்தல், அவையவமாங்கடபடவுபாதிகளை நீக்கு,
மாகாயமெனவறிதலப்பொருளைத்தானே, சுவைபடவேதியானி
ந்தலிவைமூன்றுவிதமாந், துவந்துவங்கள்பலவுமற்றுச்சுயம்பிர
காசமதாய், நவையிறந்துஞ்சொல்லிறந்துநானுமிறந்திறவா,ஞான
மிறந்திராசியமாய்நவின்றதத்துவிதமே..... ...........(எ-ம்.)

(திருவாய்மொழி.)

நன்றாய்ஞானங்கடந்துபோய்நல்லிந்திரியமெல்லாமீத்....[ந்த
தொன்றாய்க்கிடந்தவரும்பெரும்பாழுலப்பிலதனையுணர்ந்துணர்
சென்றாங்கின்பதுன்பங்கள்செற்றுக்களைந்துபசையற்றால்....*
அன்றேயப்போதேவீடதுவேவீடுவீடாமே...... ......(எ-ம்)

(சசிவர்ன்னபோதம்.)

செறிந்தகாரணகாரியங்கள்சிதைந்துமேலுறசித்ததாய் ... ...*
அறிந்தவாதனைதானுமற்றது அசிபதப்பொருளாவதே...(எ-ம்)

(தாயுமானசுவாமிகள்.)

எனதென்பதும்போயானெனல்போயெல்லாமிறந்தவிடங்காட்டு
றினதென்பதும்போய்நீயெனல்போய்நிற்குநிலை... .........*

(அன்றியும்.)

பொருளேநின்பூரணமேலிட்டகாலம்....... ..............*
போக்குவரவுண்டோதற்போதமுண்டோ...............*

விருடானுண்டோவல்லால்வெளிதானுண்டோ.........*
வின்பமுண்டோதுன்பமுண்டோயாமங்குண்டோ (எ-ம்)

(கந்தரனுபூதி.)

ஆறுவருதேயயில்வேலரசே.................*
ஞானகரனேநவிலத்தகுமோ..................*
யானாகியவென்னைவிழுங்கிவெறுந்.............*
தானாய்நிலைநின்றதுதற்பரமே...............*

(அன்றியும்.)

வானோபுனல்பார்கனன்மாருதமோ.........*
ஞானோதயமோநவினான்மறையோ.........*
யானோமனமோவெனையாண்டவிடந்.........*
தானோபொருளாவதுசண்முகனே......(எ-ம்)

(பகவற்கீதை.)

யாதொன்றிந்தபுலனறியாவளவிலின்பமாயிருக்கும்......[காரி
யாதொன்றினைச்சென்றடைந்தோர்கள்பின்னையதனினிரண்டா
யாதொன்றினைப்பெற்றவரிதனின்மிக்கதோப்புண்டென்னார்கள்,
யாதொன்றிந்தவறிவிற்சேயறிவாய்நிற்குமதினின்றோர்..(எ-ம்)

(கைவல்யநவநீதம்.)

தஞ்சமாங்குருவுஞ்சொன்னதத்துவவழிதப்பாமல்............*
பஞ்சகோசமுங்கடந்துபாலழையுந்தள்ளியுள்ளிற்..............*
கொஞ்சமாமிருப்பும்விட்டுக்கூடஸ்தபிரமமென்னு.........*
நெஞ்சமுநழுவியொன்றாய்நின்றபூரணத்தைக்கண்டான்....*

(அன்றியும்.)

அனுபவானந்தவெள்ளத்தழுந்தியேயகண்டமாகித்.........*
தனுகரணங்களாதிச்சகலமுமிறந்துசித்தாய்..................*
மனதுபூரணமாய்த்தேசுமானசற்குருவுங்காண..............*
நனவினிற்சுழுத்தியாகிநன்மகன்சுபாவமானான்,.........(எ-ம்)

(ஞானவாசிட்டம்.)

அவ்வறிவுசங்கற்பத்தாற்கட்டுண்ணு .. ... ... ... ... ... *
மதுவிடில்வீடுறுமந்தவறிவுதன்னைச்... ... ... ... ... ...*

செவ்விதிநீயநித்தனையாற்போகத்திச்சை ... ... ... ... ... ... *
செகக்காட்சியனைத்தினையுந்தீர்தியானாய் ... ... ... ... *
எவ்வமறநிறைமனத்தாலடைபற்பால .. ... ... ... ... ... *
யாவுமடைந்தாய்காசுதிக்கெட்டாதொன்றிற் ... ... ... *
கவ்லவயறவடைகின்றாய்முத்தனானாய் ... ... ... ... ... *
கருத்திலுறுமயக்கமெனுங்கவலைதீர்வாய்... ... ..(எ-ம்)

(ஞானசுகாதீதவெண்பா.)

உற்றுணர்ந்ததெல்லாமுணர்வாகுமுண்மைதனிற் .. *
பெற்றிருப்பதற்றவிடம்பேறுகுங் - கற்றநூல் ... *
பேசவினிவேண்டாய்பிறிதில்லையத்துவிதம் ... *
ஆசையறநின்றவிடமாம்... ... ... ...(எ-ம்.)

(திருவாசகம்.)

ஒங்குதிரண்டுமூரன்றெழுமோசைதழைப்பனவாகாதே ...... *
சாதிவிடாதகுணங்களமோடுசலித்திடுமாகாதே ... ... *
அங்கிதுநன்றிதுநன்றெனுமாயையடங்கிடுமாகாதே .. ... *
ஆசையெலாமடியாரடியோமெனுமத்தனையாகாதே ... ... *
செங்கயலொண்கண்மடந்தையர்சிந்தைதிளைப்பனவாகாதே ..*
சீரடியார்கள்சிவானுபவங்கடெரிந்திடுமாகாதே .. ... ... *
எங்குநிறைந்தமுதூறுபரஞ்சுடரொய்துவதாகாதே ... ... ...*
ஈறறியாமறையோனெனையாளவெழுந்தருளப்பெறிலே.. (எ-ம்)

(சிவானந்தமாலை.)

மித்தையுடல்கட்டறுத்துமெய்யருளாய்மட்டொழிக்குந் ... *
தத்துவமுங்கேவலமுஞ்சார்வகற்றிச் - சுத்தத் ... ... ... ...*
தனியாகித்தானும்போய்த்தற்பரமாய்விட்டாற் ... ... ... *
சனியானிதுசத்தியம் ... ... ... ... ... ... (எ-ம்)

(ஒழிவிலொடுக்கம்)

என்னுணையென்னுணையென்னுணையேகமிரண் ... *
டென்னுமற்சும்மாவிருவென்று - சொன்னான்... *
திருஞானசம்பந்தன்சீகாழிநாடன் ... .... *
அருளாளன்ஞானவிநோதன் ... ... (எ-ம்)

(சொரூபசாரம்.)

ஞான நூல்கற்றுணர்ந்து நற்றுறவுபூண்டாலு... ... ... ✻
மோனசமாதிமுயன்றாலுந் - தானாகி... ... ... ✻
எல்லாக்கவலையுமற்றின்புற்றிருப்பதுவே... ... ✻
சொல்லாருமுத்திச்சுகம்... ... ... ... (எ-ம்)

(சிவஞானசித்தியார்.)

அறியாமையறிவகற்றியறிவினுள்ளே, யறிவுதனையருளினாலறியாதேயறிந்து, குறியாதேகுறித்தந்தக்கரணங்களோடுங், கூடாதே வாடாதே குழைந்திருப்பையாகிற், பிறியாதசிவன்றானேபிரிந்து தோன்றிப், பிரபஞ்சபேதமெல்லாந்தானாய்த்தோன்றி, நெறியாலேயவையெல்லாமல்லவாகி, நின்றென்றுந்தோன்றிடுவனிராதாரனாயே... ... ... ... ... ... ... ... ... (எ-ம்)

(கண்ணுடையவள்ளல்.)

தம்மாலறிந்தனயாவையுந்தாமலவென்றறிந்து... ... ... ✻
மும்மாயை மும்மலமுக்குண நீங்கிமுழுதறிவாற்... ... ✻
சும்மாவிருக்கத்துரியங்கடந்தசுகமுதிக்குஞ் ... ... ... ✻
சன்மார்க்கமுத்தியிதென்றான்றடங்கச்சிமேகம்பனே... (எ-ம்)

(அகஸ்தியமுனிவர்.)

முடிந்திடம்பேச்சற்றமோனமெய்ஞ்ஞானமுதல்வதின்னைப்... ✻
படிந்திடமேபதிபாசம்பசுவிருட்பற்றற்றதும் ... ... ... ✻
விடிந்திடந்தானென்னு நானென்னுமாயையும்விட்டெவையுங் ✻
கடிந்திடத்தப்புறத்தப்புறத்தாநந்தங்காணுமதே... ...(எ-ம்)

(பட்டணத்துப்பிள்ளையார்.)

வான்றேடுமறையேயோமறைதேடும்பொருளேயோ ... ✻
ஆன்றேடுமுயிரோயோவுயிர்தேடுமுணர்வேயோ... ... ✻
தான்றேடநான்றேடச்சகமெலாந்தனைத்தேட ... ... ✻
நான்றேடிநான்காணநானோநானோ... ... ... (எ-ம்)

(பத்திரகிரியார்.)

என்னையென்னிலேமறந்தே, யிருந்தபதியும்மறந்து... ... ✻
தன்னையுந்தானேமறந்து, தனித்திருப்பதெக்காலம்... ...(எ-ம்)

(உண்மைவிளக்கஞ்சிந்தனை.)

முத்திதனையடைந்தோர்முந்துபழம்போதங்கி... ... ... ✻
வித்தகமாம்வீணையிலவையிற்றி - னெத்த... ... ... ... ✻

விரதமனம்வெம்மையெழினுதம்போல ... ... *
விரவுவனென்றேறும்வித... ... ... ... (எ-ம்)

(அன்றியும்)

தத்துவங்களெல்லாஞ்சகசமாயான்மாவிற்... ... ... *
பெற்றதனினிற்கின்றபெற்றிம்பால் - முத்திதனில் ... ... *
சித்தமலமற்றுர்செறிந்திடுவரொன்றுமறை... ... ... *
சத்தியமாயோதியிடுந்தான்... ... ... ... (எ-ம்)

(அத்துவிதவுண்மை.)

தன்னையறியாவியற்கையினிற், சத்தேபோலவிளங்கியிடுந் ... *
தன்னையறிந்தவுடன்சத்தாய்த், தாமேவிளங்குமிவ்வுலகந் .....*
தன்னையறியுமளவுமிவை, தன்னைவிடவேறிலையெனவே... ...*
தன்னைநோக்கியிடினவையுந், தானுய்விளங்குமுடிவதனில் (எ-ம்

வரும் மற்றும் வருவனவற்றுற் காண்க.

அத்துவித அபரோக்ஷானுபவத்தில் வேறுதோன்றுமல் பரிபூரணானந்தபோதமுறச் சகலமுந் தன்மயப் படுத்திக்கொள்ளுஞ் சுயஞ் சைதன்யத்தை அடைந்தவர்கள்சித்திமுத்திகள்பெறுவரென்றமையால் யாமும் நிர்விக்னமாய் இந்நூல் நிறைவேறப் பெறுவோமென்றதாயிற்று.

---

காப்புமுற்றிற்று.



உ

சிவமயம்.

# நிஷ்டானுபூதி.

## பாயிரம்.

(பரசிவவணக்கம்.)

சீர்பூத்தசெஞ்சடையிற்சுரநதியுங்காமதியுஞ்செறிந்திலங்க ... ✻
வார்பூத்தகுயவனிதையொருபுறத்திற்பசந்தொளிரவாரியுண்ட ✻
கார்பூத்தமணிவண்ணன்கட்கமலமிணைக்கமலக்கழலின்மேவ ... ✻
ஏர்பூத்தகோவலில்வாழ்வீரட்டத்தொருமுதலையிறைஞ்சுவோமே

(இ-ள்.) சிறப்புப்பொருந்திய செவந்தசடையில் - தெய்வகங்கையும்- அமுதகிரணங்களையுடைய- இளம்பிறையும்- நெருங்கிப் பிரகாசிக்கவும்- கச்சுப்பொருந்திய- ஸ்தனங்களையுடைய- தேவியார் இடப்பாகத்தில் (மரகதரத்தினம்போலப்) பசுமையாய் விளங்கவும்- நீருண்டமேகத்தையொத்த மகாவிஷ்ணுவின் கண்ணாகிய தாமரைப்புஷ்பம்- இரண்டாகிய பங்கஜத்தைப் போன்ற திருவடிகளிற் ப்ரகாசிக்கவும் - அழகுபொருந்திய திருக்கோவலூரில் எழுந்தருளியிருக்கும் திருவீரட்டேஸ்வரரை வணங்குவாம் —(எ-று.)-ஏ-அசை. (க)

(பரதேவதைவணக்கம்.)

அரியநாயகியளவைக்கனுதினமுநெக்குருகுமடியரன்புக்....✻
குரியநாயகியெங்குந்தானுகிநீங்காமலொளிராநின்ற.........✻
கரியநாயகிகோவற்பிரானிடத்திலெப்போதுங்கலந்துவாழும்.✻
பெரியநாயகியுபயபதமலரையனுதினமும்பேணுவோமே ...✻

(இ-ள்.) மனத்தினாலும்- வாக்கினாலும்- நினைத்தலுஞ்- சொல்லலுமாகிய- அளவுக்கடங்காத - ஈஸ்வரியாயுந் தினந்தோறும் மனம்நெக்குவிட்டுருகும்- அடியார்களுடைய அன்புக்குச் சுதந்தரமான பரதேவதையாயும்-எவ்விடத்தினுந்தானே(அகண்டாகார)மாய் நீங்காமல் பிரகாசிக்கின்ற சர்வ சாக்ஷிக்குரிய - உமையாயுந், திருக்கோவலூரில் எழுந்தருளியிருக்குந் திருவீரட்டேஸ்வ

ருடைய இடப்பாகத்தில் அனவரதமுஞ் சேர்ந்து வாழ்கின்றவ ராயும் (விளங்குகின்ற) பெரியநாயகி யம்மனது உபயசரணாரவி ந்தங்களைத் தினந்தோறுந் தியானிப்பாம்---(எ-று.) அகரம்-சாரி யை-ஏ-அசை. (உ)

(கணபதிவணக்கம்-வேறு.)

அரியானையயன்மாலுக்ககண்டபேரொளியானைத்... ... ... *
தெரியானையன்பிலர்தம்மனவாக்கதனுக்... ... ... ... *
குரியானையன்பர்தமக்குயர்பெரியாளீன்றெடுத்த ... ... ... *
பெரியானைக்கணபதியின்பிறங்கியபொற்பதப்பணிவாம்... ...*

(இ-ள்.) பிர்ம்ம - விஷ்ணுக்களாலுங் காண அரியவராயும்-அ கண்டாகாரமாகிய ஞானப்பிரகாசராயும் - அன்பில்லாதவர்களு டைய மனோவாக்குக் காயமென்னுந் திரிகரணங்களாலும்- அள வுதெரியக்கூடாதவராயும்- அடியார்களுக் குரியவராயும்- உயர் ந்த பெரியநாயகி யம்மன் பெற்றெடுத்த (மூத்த புத்திரராயுமி ராநின்ற) * பெரியானைக் கணபதியினுடைய - விளங்குகின்ற அழகிய திருவடிகளை வணங்குவாம்—(எ-று.) (௩)

(சுப்பிரமணியர்வணக்கம்-வேறு.)

கடல்சுவறநெடுமாயக்கிரிவீழச்சூரனுரங்கலங்கச்செம்பொன்..*
மடலவிழ்கற்பகநிழலில்வலாரியும்வந்தரசிருப்பமகங்களோங்க.*
விடலரியவிபுதர்சிறைவிடமுனிவர்செய்தவங்கண் மேலுமோங்க,
அடல்கெழுவேலேவியவோராறுமுகனடியிணையையகத்துள்வை ப்பாம்... ... ... ... ... ... ... ... ... ... *

(இ-ள்.) சமுத்திரஜலம் ஸோஷித்துப் போகவும் - உயர்ந்தவ ஞ்சனையாகிய கிரவுஞ்சமென்னும் மலைபிளந்து விழவுஞ்-சூரப ன்மனுடைய மார்பு கலங்கவுந் - தேவேந்திரனுஞ் செம்பொன் னிறமாகிய இதழ்விரிந்த (புஷ்பங்கள் நிறைந்த) கற்பகவிருக்ஷ த்தின் நிழலில்வந்து கொலுவீற்றிருக்கவும் - யாகங்கள் விர்த்திக் கவும்- விட்டுநீங்குதற்கரிய சிறையில நின்றுந் - தேவர்கள் நீங்க வும்- ரிஷிகள்செய்யுந்தவங்கள் மேன்மேலும் வளரவும்- வெற்றி மிகுந்தவேலாயுதத்தைப் பிரயோகித்த- ஒப்பற்ற சண்முகக்கட

---

* பெரியானைக்கணபதி- என்பது- திருக்கோவலூரிலிருக் கும் விநாயகருக்குப் பெயராம்.

வுள்ளிறுடைய உபயதிருவடிகளை உள்ளத்தின்கண் வைத்துத்தியா னிப்பாம்—(எ-று.) மடலவிழென்றதனால் புஷ்பங்க ளென்பது வருவிக்கப் பட்டது. ✻

(ப-ம்.) ஒருகாலத்தில் - சூரபன்மனுக்குத் தோல்வியடைந் து சீகாழியிற்சென்று ஒளித்துப் பரமசிவனைப் பூசித்துக்கொ ண்டிருந்த தேவேந்திரன் மறுபடியும்வந்து அரசுசெலுத்தவுமெ ன்பார்—வலாரியும்வந் தரசிருப்பவெனக்கூறினார். (௪)

(திருநந்திதேவர்வணக்கம்-வேறு.)

முந்துசஞ்சிதங்கடீரமும்மலக்கங்குல்பாற... ... ... ... ....✻
அந்தியும்பகலுமில்லாவாதித்தனகத்திற்றோன்ற... ... ... ✻
இந்தியம்புலன்கண்மாயவின்பவாரிதியின்மூழ்க ... ... ...✻
நந்தியெம்பெருமான்பாதநளினமென்சிரமேல்வைப்பாம்....✻

(இ-ள்.) முதன்மையாகிய சஞ்சிதவினைகள் அழியவும்- மும்ம லமாகிய இருள் நீங்கவும்- இரவும் பகலுமற்ற ஞானசூரியன் உள த்திலுதிக்கவும்- பஞ்சேந்திரியங்களும்- அதன்விஷயங்களுங்கெ டவும்-ப்ரம்மானந்தக்கடலுள் மூழ்கவும்-எம்பெருமானாகியதிரு நந்திதேவருடைய பாதாம்புயத்தை - எனது முடியின்கண்வை த்துவாழ்வாம்—(எ-று.) ✻

(ப-ம்.) ப்ரகிருதியின் தோற்றமாகிய பகலும்- அதன் ஒடுக் கமாகிய இருளும்- இறந்து சதோதயமாய்ப் பிரகாசிக்கின்ற சர் வசாக்ஷியாகிய பேரறிவென்பார்—அந்தியும் பகலுமில்லா வாதி த்தனென்றார். சஞ்சிதமாவது, அனந்தபவங்க ளுண்டாவதற்குக் காரணமாகிய வினைகள் கட்டிப்பட்டிருப்பதாம். மும்மலங்களா வன, ஆணவம்- மாயை- கன்மமாம். இவற்றுள் - தண்டுலத்தைப் பற்றிய தவிடுபோல ஆத்மாவை ஆணவமலம் பற்றியிருக்கும்,- தண்டுலத்தைப்பற்றிய உமியைப்போல ஆத்மாவை மாயாமலம் பற்றியிருக்கும், தண்டுலத்தைப்பற்றிய முளையைப்போல ஆத் மாவைக்கன்மமலம் பற்றியிருக்கும். (௫)

(நால்வர்வணக்கம்-வேறு.)

அடிபணிவேனுமைசொர்க்கத்முதையபின்றினியகவியமுதந் தந்தோன், அடிபணிவேன்பவக்கடலுமுவர்க்கடலுங்கடந்தவாக் கரசின்செங்கேழ், அடிபணிவேன்பரவைபாற்பரசிவனைத்தூதாக

வனுப்புவித்தோன்;அடிபணிவேன்திருவாதவூரடிகள்புகழேத்தி
யன்பிற்றுமே ... ... ... ... ... ... ... ... *

(இ-ள்.) அன்போடுங் கீர்த்திகளைத் துதித்துப், பார்வதியாரு
டைய ஸ்தனத்தின் பாலையுண்டு- இனிமைதங்கிய செந்தமிழ்ப்பா
டலாகிய- அமுதத்தைத் தந்தருளிய திருஞானசம்பந்த ஸ்வாமி
களுடைய - திருவடிகளைவணங்குவேன் - பிறவிக்கடலையும் - உப்
புக்கடலையும் - நீந்திய அப்பர் ஸ்வாமிகளுடைய சிவந்த நிறம்
பொருந்திய - திருவடிகளை வணங்குவேன்.—பரவை நாச்சியா
ரிடத்திற் பரமசிவத்தைத் தூதாக அனுப்புவித்த- சுந்தரமூர்த்தி
ஸ்வாமிகளுடைய திருவடிகளை வணங்குவேன்—(எ-று.) தா
ன்-சாரியை- ஏ-அசை. அன்போடுங் கீர்த்திகளைத் துதித்து-என்
றது-நால்வருக்கும் கூட்டுக. (௬)

(வசவேசர் - சென்னவசவேசர்வணக்கம்.)

சிவசமயப்பயிர்தழையப்பரசமயக்களைநீங்கத்திகழ்வேதத்தோ,
டுவமையிலாகமநீதியோங்கவரும்வசவணர்தாளுவந்துபோற்றி*
அவமறுமாறங்கலிங்கங்கலைமுகஞ்சாதாக்கியம்பத்தியத்தஞ்சத்தி
இவைகளொருவடிவாயசென்னவசவேசர்பதமிறைஞ்சுவோமே,

(இ-ள்.) சைவசமயமாகிய பயிர்கள் விர்த்தியடையவும்- அன்
னியசமயமாகிய களைகள்கெடவும்- பிரகாசமுள்ள வேதங்களுட
னே- ஒப்பில்லாத வீரசைவாகம ஒழுங்கு ப்ரபலத்தை யடைய
வும்-அவதாரஞ்செய்து - வசவன்னனென்னுந் திருநாமத்தைக்
கொண்ட ஸ்வாமிகளது திருவடியைக் களிப்புடனே வணங்கிக்கு
ற்றமற்றிராநின்ற- பீடம் -படி- நிதம்பம்- கோமுகம்- மேல்வட்
டம்- நாளத்தடி- என்னும்- ஆறங்கத்தினையு முடைய லிங்கமூர்த்
தியும்-சாந்தியாதீதகலை- சாந்திகலை- வித்யாகலை- ப்ரதிஷ்டாகலை
திவர்த்திகலை- என்னும்-ஐந்துகலைகளும், ஈசானம்- தத்புருஷம்-
அகோரம் - வாமதேவம் - சத்தியோஜாதம் - என்னும்- ஐந்து
முகங்களும், சிவசாதாக்யம் - அமூர்த்திசாதாக்யம் - மூர்த்திசா
தாக்யம்- கத்துருசாதாக்யம்- கர்மசாதாக்யம் - என்னும்-ஐந்து
சாதாக்யங்களும், சத்தி - மௌநாங்கம்- அத்தி - தலம் - கந்தம்-
சுவை-என்னும்-ஆறுபத்திகளும், கரதலகமலமென்னும்- அஸ்த
மும்,பராசத்தி- ஆதிசத்தி-இச்சாசத்தி-ஞானசத்தி-கிரியாசத்தி-
என்னும்-ஐந்துசத்திகளும், ஆகிய இவைகளெல்லாம் ஏகருபமா
ய்-விளங்கிய சென்னவசவேசர் என்னும்அங்கிதத்தையுடையஎம

ருஸ்வாமிகளது உபயசரணங்களை வணங்குவாம் — (எ-று.) ஏ-அசை. ⁕

இலிங்கமாவது - இஷ்டலிங்கம் - ப்ராணலிங்கம்- பாவலிங்கம்- ஆசாரலிங்கம் - குருலிங்கம் - சிவலிங்கம் - சரலிங்கம்- ப்ரசாதலிங்கம் - மகாலிங்கம்-என வீராகம சித்தாந்தப்படி ஒன்பதுவகையாமெனக்கொள்க. ⁕

பஞ்சசத்திகளின் விபரமாவன, சிவத்தின் அம்சத்தில்-ஆயிரத்தொன்று பராசத்தியும். அப்பராசத்தியின் அம்சத்தில்-ஆயிரத்தொன்று ஆதிசத்தியும், அவ்வாதிசத்தியின் அம்சத்தில்-ஆயிரத்தொன்று இச்சாசத்தியும், அவ்விச்சா சத்தியின் அம்சத்தில்-ஆயிரத்தொன்று ஞானசத்தியும், அந்த ஞானசத்தியின் அம்சத்தில்-ஆயிரத்தொன்று கிரியாசத்தியுமாமென்பதுசைவாகம சித்தாந்தமெனக்காண்க. (எ)

(குகைநமசிவாயர்வணக்கம்-வேறு.)

அன்னமயம் பிராணமய மனோமயம்விஞ்ஞானமானந்த மயத்தினுடனைங்கோசமாய, இன்னன்மயனீங்கிய மெஞ்ஞானியுளங்குகையாவெப்போதுநீங்காமலிசைந்துமிகவாழ்வோன், பன்னரியவிரிவுயரஞ்சமனதிகமிவைகள்பகர்வரிதாய்ப்பிரமன்முதற்பண்ணவர்தம்முளத்தில்,உன்னரியவோநமசிவாயகுருராயனுபயசரணமதுளத்துமுச்சியினும்வைப்பாம்... ... ... ... ⁕

(இ-ள்.) அன்னமயம்- பிராணமயம் - மனோமயம்- விஞ்ஞானமயம்- ஆனந்தமயம்- என்னும் பஞ்சகோசமாகிய துன்பத்துடனே இன்பத்தையும் நீங்கிய உண்மைஞானியின் இருதயத்தையே குகையாகக்கொண்டு -அனவரதமும்- நீங்காமல் ஒத்து வாழ்கின்றவராயும், சொல்லுதற்கரிய விஸ்தாரமும்- உயர்வும்-சமமும்-விசேஷமும்- ஆகிய இவைகளில் வேறுசொல்வதற்கில்லாதவராயும்- பிரமன்முதலிய தேவராலும்-மனத்தின்கண் நினைத்தற்கரியவராயும்-ப்ரணவஸ்வரூபராயும்- (விளங்குகின்ற)குகைநமசிவாயகுருராயருடைய உபயசரணங்களை எமது அகத்திலுஞ்சிரத்திலும்வைத்து வாழ்வாம்—(எ-று.) தம்-சாரியை. ⁕

அன்னமயமாவது, தோலும்- இரத்தமும்- தசையும்-நரம்பும்-எலும்பும்- மூளையும் - ஆகிய ஷட்பாவ விகாரமாகத்தோற்

றுகின்ற-ஸ்தூலதேகமாயிருத்தல்- ப்ராணமயமாவது, ப்ராணுதியாகிய- சமஷ்டிவாயு ஒன்றுடனே வாக்காதி கர்மேந்திரியம் ஐந்துங் கூடியிருத்தல். மனோமயமாவது, புத்திநீங்கலாய்- மனமாதியாகிய சமஷ்டி அந்தக்கரணம் ஒன்றுடனே வாக்காதி கர்மேந்திரியம் ஐந்துங் கூடியிருத்தல். விஞ்ஞானமயமாவது, புத்தியொன்றுடனே சுரோத்திராதி ஞானேந்திரியம் ஐந்துங் கூடியிருத்தல். ஆனந்தமயமாவது, மனோமயமும்- விஞ்ஞான மயமும்-அஞ்ஞானத்திலழுந்திய காரணதேகமாயிருத்தல். (௮)

(குருநமசிவாயர்வணக்கம்-வேறு.)

சீலமிகுங்குகைநமசிவாயர்சாதனராய்த்திகழுமன்பால், பாலி
னுறுசுவைபோலப்பனுவலவர்மீதுமம்பலவர்மீதும், கோலமுட
னேசெய்யுங்குருநமசிவாயர்பதங்குழைந்துபோற்றித், தாலமி
சைநிலவவருசிவசரணரனைவரையுந்தாழ்ந்துய்வாமே ... ... *

(இ-ள்.) (ஞானமாகிய) நல்லொழுக்க மிகுந்திருக்கின்ற - குகைநமசிவாயர் கையினுற்காட்டிய (சின்முத்திரையைச்) சாதனமாகக் கொண்டவராய்ப் பிரகாசிக்கின்ற அன்பினுலே அவ்வாசிரியர்மீதும்- சிதாகாசத்தில் எழுந்தருளியிருக்கும் கடவுளின்மீதும்- பாலிலுள்ள சுவையைப்போலும் (இனிமைதங்கிய) தமிழ்ப்பாடல்களை -அழகாகச்செய்த- குருநமசி வாயருடைய திருவடிகளை மனமுருகித் துதிசெய்து -பூமியின்கண்ணே- ஒளிவிளங்க அவதரித்த சிவசரணர்கள் யாவரையும் வணங்கிவாழ்வாம்— (எ-று.) ஏ ஏ அசைகள். (௯)

(அவையடக்கம்.)

பத்தியங்கங்கொடுசெய்யும்பூசனையுமறையாதிபகரும்வண்ணம்,
இத்தரணிமிசைசெய்யும்பூசனையும்யானைமுதலிசைக்குமைந்து
சத்தியின்றிச்செயும்பூசையலதறியாநீசிதான்சுழற்றிவீசும்....*
அத்தனிக்கூவிளப்பூசைக்கிரங்கவினுல்யான்பாடவகமுற்றேனே,

(இ-ள்.) பரமசிவனுர் - இப்பூமியினிடத்தில் - பக்தியாகிய அங்கத்தைக்கொண்டு செய்த பூசைக்கும்- வேதாகமங்களிற் கூறியிருக்கும் விதியின்படி செய்த பூசைக்கும் - சொல்லுகின்றயானைமுதலாகப் பாம்பு- சிலந்தி- எறும்பு- நண்டு- ஆகிய ஐந்தும்- பஞ்சசத்தியில்லாமல் செய்தபூசைக்கும்(அனுக்கிரகித்த) தல்லாமல்-மூடத்தன்மையையுடைய-சண்டாள ஸ்ரீயானவள்-சுழற்றி

பெறிந்த வில்வம் (தன்மேற்பட அதையும்) பூசையாகக்கொண்டுகிருபை செய்தபடியால் அடியேனுடைய சொல்லையும் அங்கிகரிப்பாரென்று இந்நூல்செய்ய- நான்மனதில் துணிவுகொண்டேன்—(எ-று.) தான்-இ-சாரிலயகள்-எ-அசை. ❋

பஞ்சசுத்தியாவன, ஆத்மசுத்தி- பூசுத்தி- திரவியசுத்தி-மந்திரசுத்தி- இலிங்கசுத்தி- என்பனவாம். ❋

(நீசிக்குஅருள்செய்தவரலாறு.)

பிரமோத்ரகாண்டம்.

கேகய தேசத்தில்- ஒரு ப்ராமணனுடைய புதல்வி சௌமினியென்பவள்- தன்பிதாவினால்-வேதவிதியின்படி - மற்றொரு ப்ராமணனுக்குக் கலியாணம் பண்ணிக் கொடுக்கப்பட்ட வளாய்ப் புருஷனுடனே- இஷ்டத்தை யனுபவித்துக்கொண்டு இருக்கிறநாளில் -அந்தப்புருஷன்- தான்செய்த தீவினையினால் - பலவியாதிகள் மேலிட்டு இறந்துபோக- அந்தச்சௌமினியானவள் அதிக துக்கமுடையவளாகிப் பின்னர்- அதிக விரகத்தை யடைந்தவளாய்ச் சகியாமல் முறைதவறிச் சோரத் தனமாய்ப் பலபுருஷரைச்சேர்ந்து பந்துக்களும் - அன்னியர்களுமாகிய பெரியோர்களும்- வாசித்தவர்களுஞ் - சொல்லிய நன்மையைக்கேளாமல் காமசுகத்தையனுபவித்துக் கர்ப்ப மடைந்தாள். அதையறிந்ததாய்தந்தை முதலானவர்கள்- இவளை வைத்துக்கொண்டிருப்பது இனி நமக்குத் தகாதென்று ஊரைவிட்டுத் துரத்திவிட்டார்கள். அப்போது சௌமினியானவள்- அதிகதுக்கத்தோடுங் காட்டிற்போக.—ஒரு வேளாளன் கண்டு- அழைத்துக்கொண்டு போய்த் தன்வீட்டில் வைத்திருந்தான். அவனைச்சேர்ந்து- மாம்சபுக்தமும்- மத்தியபானமும் பண்ணிப் பிள்ளையைப்பெற்றுக் கொண்டிருக்கிற நாளையில்- ஒருநாள் அந்தவேளாளன் அசலூருக்குப்போகத் தனித்திருந்த சௌமினி யென்பவள்-மாம்சத்தின்ன ஆசைகொண்டு தொழுவத்திற்புகுந்து கள்ளுண்டமயக்கத்தினாலே-பசுவின் கன்றைப் பிடித்து-வெள்ளாடென்று நினைத்துக்கழுத்தையறுத்து வீட்டுக்குக் கொண்டுவந்து விளக்கின்முன்னே அரியும்போது- பசுவின் கன்றென்று அறிந்து -சிவசிவா? கள்ளின் மயக்கத்தினாலல்லவா இப்படி நேரிட்டதென்று இரண்டுநாழிகைவரையிலுந் துக்கித்திருந்து-பின்புமாம்ச அபேக்ஷையினாலே அந்தப் பசுவின் கன்றின் மாம்சத்தைப் பாகம்பண்

ணிப் புசித்துத் தோல் - எலும்புகளைத் தெருவிற்போட்டுப் பு லிவந்துகொன்றதென்று சொல்லி அழுதுகொண்டிருந்தாள். பொழுதுவிடிந்தவுடனே - புருஷனாகிய வேளாளன்வந்து பசு வின்கன்று இறந்துபோனதைக்கேள்விப்பட்டுவியசனமுற்றுச்- சௌமினியுடன்சேர்ந்து இருக்கிறநாளில்- சௌமினியானவள்- வாழ்நாள்கழிந்திறந்து இரண்டுகண்ணும் பார்வையில்லாமற் புலைமகளாய்ப்பிறந்தாள். நாயுண்ட எச்சிலையும் - மிருதியாகிய பசுவிறைச்சி முதலாகிய மாம்சங்களுடனே கள்ளையும் உண்பித் து-வளர்த்துத் தாய்தந்தைகள் இறந்துபோக— இப்புலைமகள் கருங்காக்கையைப்போல நிறமும்- தேகமுழுதும் புழுநெளிய- அதிகரித்த ரணமும்-அதிகமான குஷ்டமும் புண்வழியில்- அதிக நாற்றமும்- சுரமும்- சூலையும்- க்ஷயமும்- இன்னும்பலவிதவியா திகளுங் கொண்டிருந்ததால் ஒருவரும் விவாகஞ் செய்யாமற் போனார்கள். இவள்பசிமுதலாகிய நோய்களைத்தாங்கமாட்டாம ல்-புலைச்சேரிதோறும் - பிச்சையெடுத்துண்டு- இருக்கும்நாளை யில்- தேகமிளைத்துழைப்படைந்து - அதிக துன்பமுற் றுப் பசிவருத்தம் மேலிட நடைதளர்ந்து- சிவராத்திரி புண்ணி யகாலத்தில்- கோகர்னத்துக்குப்போவார்களுடன்சென்று ஒரு வீதியிற்போய்க் கண்ணில்லாதவளுக்குப் பிச்சைபோடுங்களெ னக்கூவித் திரிவதைக்கண்டு- ஒரு சிறுவன் - தன்கையிற்போட் டவில்வத்தை உணவென்று வாயிலிட —உண்ணத்தகாததாயிரு ந்தபடியால் அதைச்சுழற்றிவீசினாள். அவ்வில்வங்காளிக்குச்சமீ பத்திலிருந்த பழைய சிவலிங்கத்தின் முடிமேல் விழுந்தது,— அன்றிரவு நீங்கிச் சூரியோதய மானபின்பு வருத்தத்தோடும் ஒரு புலைமகள்- கையைப் பிடித்துத் தடியை யூன்றிக்கொண்டு கால்சோர- அவ்வூரைவிட்டுப் போகும்போது -பாலைநிலத்தில்- இருமலினால்- தவறிவிழுந்து மரணத்தை அடைந்தனள்.—சிவ ராத்திரி முழுதும் ஆகாரமில்லாம லிருந்ததே விரதம் - பசியி னால் துயில் நீங்கியதே- சாகரம்- அப்பொழுது தங்கயிடமில்லா மல் பனியில் நனைந்ததே -ஸ்நாநம்- வில்வம் - எண்ணு தெறிந்த தாயினுந் தன்மேற்பட்டபடியால் அதுவே அர்ச்சனையெனத்தி ருவுளங்கொண்டு -பரமசிவனாருள்செய்ய - நவரத்நகசிதாலங் காரவிமானத்துடன்- பலசிவகணநாதர்கள் - பூமியினிடத்துவந் து-இவள் உயிரைத் திவ்யரூபத்திற் சேர்த்து விமானத்திலேற்றி வித்தியாதரர்பாடவும்- அரம்பையராடவுங்- கொண்டுபோய்மு க்குணவசத்தராய் அஞ்ஞானவிருளிற் புக்கவர்பொருந்துதற்கு

அரிதாயுஞ் - சூரியனொளியை - மின்மினிபோலச் செய்யுங் காந்தியையுடையதாயும்- வேதவித்தாயும்- அரியயன் பெறுதற்கு அரிதாயும்- அடைந்தவர் மீளக்கூடாததாயும்- யாவர்க்குஞ் சேர்தற்கரிதாயும் விளங்குகின்ற-மோக்ஷத்தின்கண்ணே சுவாமியுந் தேவியுங்காண விட்டார்கள் என்பதாம். (௰)

( இதுவுமது. )

வாருங்கோள்வையகத்தீர்யான்கிரவாரிதியைவள்ளத்தாலே,பாருங்கோளந்திவேணிங்களுநன்றுபருந்திப்பாலினாசை, தீருங்கோளென்றொருவன்செப்புதல்போற்சிவயோகநிட்டைதன்னை, நீருங்கோளரவணியுமண்ணன்மொழிப்படியேயாநிகழ்த்தலுமே..*

(இ-ள்.) கங்கையையுந்- தீமையைச் செய்கின்ற சர்ப்பத்தையுந்தரித்த பரமசிவனார் - உமக்கு அனுக்கிரகித்தபடியே - சிவயோக நிஷ்டையை (நிஷ்டானுபூதி யென்னும் பெயரையுடைய நூலாக) யாம் தமிழினாற்செய்வது (எதுபோலுமெனில்) உலகத்தாரோ? வாருங்கள்! நான் பாற்கடலைக் கிண்ணத்தினாலே யளந்துதருவேன்- பாருங்கள்- நீங்களுஞ் செவ்வையாக வுண்டு பாலினாசையைத் தீர்த்துவிடுங்களென்று ஒருவன் சொல்வதை யொக்கும்—(எ-று.) தான்-சாரியை-ஏ-ஏ. அசைகள். *

(எனவே.) பூலோகத்தார்- நூலாசையை விட்டொழிந்து-அந்நூற்பயனாகிய- ப்ரம்மநிஷ்டையை-அடையும்பொருட்டு-உமைக்குப் பரமசிவனார் அனுக்கிரகித்ததென்பதுதோன்ற-அண்ணன்மொழிப் படியெனவும், இந்நூல் பார்க்கத்தக்க நுட்பபுத்தியையுடைய புண்ணியோத்தமர்களாகிய - இவ்வுலகத்தாரோ வரக்கடவீர்க ளென்பதுதோன்ற - வாருங்கோள் வையகத்தீரெனவும், ஆத்மகோடிகளுக்கு -ப்ரம்மநிஷ்டையை யெடுத்துப்போதிக்கின்ற- நாலுவேதங்களி லுண்டாகிய -அஷ்டோத்தரசத வுபநிஷத்துகளும் - அவற்றை மேன்மேலுந் தெளிவாகச் சொல்லுகின்ற பலநூல்களும்- அளவி லெனபது தோன்ற- கிரவாரிதியையெனவும், அவ்வளவிறந்த சுருதிகளாகிய - பாற்கடலையறிந்து- அவற்றின் பொருளாகிய - பால்குடித்தற்கு ஆயுளின்மையால் -வரிசைக் கிரமமாக நிஷ்டையை யாமெடுத்துப் போதிப்போமென்பது தோன்ற— யான் கிண்ணத்தா லளந்தீவேனெனவும், உங்களுடைய அறிவின்கண்ணேக்கொண்டு அந்தநிஷ்டையைச் சாதித்துப் பரிபூரணமான ஆரூடபதத்தை- விரவில

டைந்த- நூலாசையை ஒழித்துவிடுங்க ளென்பது தோன்ற—பாருங்கோள் நீங்களுநன்கு யருந்திப் பாலினுசை தீருங்கோளெனவும், சர்வானந்த வல்லமையுள்ள இந்நூலாசிரியர் - தாம் நிர்வாணசுகத்தை- நிஷ்டாநுபூதியென்னும்- பெயரையுடைய தமிழ்நூலாகச் செய்வதற்குக் கற்றுவல்ல சான்றோர் முன் பற்றுதவொனத் தாழ்ந்து கூறுதல்- முறைமையென்பதுந்தோன்ற - என்றொருவன் செப்புதலபோற் சிவயோக நிஷ்டைதன்னை யாநிகழ்த்தருவனெனவுங் கூறினாரெனப்பெற்றாம். (௧௧)

( நூல்வரலாறு. )

அத்தனார்தமைக்கயிலை பிடத்துமையாள்வணங்கிமகிழ்ந்தன்பிற்கேட்ப, உத்தர வாதுளர்தன்னிருமேலெழாம்படலத்திலுண்மைஞானமுத்திதனையுதவுநிட்டானுபூதியையெடுத்துமொழிந்தானத்தை,இத்தலனிலியான்றமிழாற்புலலறிவுகொடுபுகலவிசைந்துளேனால்... ... ... ... ... ... ... ... ... ... ...*

(இ-ள்.) கயிலாசத்தி லெழுந்தருளி யிருக்கின்ற கடவுளைத்-தேவியானவர் வணங்கிச் சந்தோஷித்து அன்புடனே (ஆத்மஞான நிஷ்டையை அனுக்கிரகம் பண்ணவேண்டுமென்று) கேட்ப-அக்கடவுள்- வாதுளமென்னும் ஆகமத்தில்- உத்தரபாகத்தில்- இருபத்தெட்டாம் படலத்தில் (தாம்சொல்லியிருக்கின்ற) மெய்யறிவாலடைகின்ற- மோக்ஷத்தைத் தருகின்ற- நிஷ்டாநுபூதியையெடுத்து வுபதேசித்தார். அதனை யிப்பூமியின்கண் - நான் என்னுடைய சிற்றறிவைக்கொண்டு (நிஷ்டாநுபூதியென்னும் பெயரையுடைய நூலாகத்)தமிழினாற்பாடமனமிசைந்தேன்—(எ-று) ஆல் - அசை. (௧௨)

பாயிரம்-முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம்-௧௨.





௳

திருச்சிற்றம்பலம்.

# நிஷ்டானுபூதி.



## நூல்.

(அவதாரிகை.)

தேவியார் பரமசிவத்தை வணங்கி ஞானநிஷ்டா சாதனையை அடியேற்குத் திருவுளஞ்செய்ய வேண்டுமென, அக்கடவுளுநஞ் சொல்லுவோங் கேட்கக்கடவாயெனல்.

நித்தனையுமையா ளடிபணிந்தெனக்கு நிட்டைசாதனை நிகழ்த்
தெனவே, அத்தனுமகிழ்ந்தேநீவிளுவிடுதலாருயிர்த்தொகை
கண்மெய்யுணர்வான்,முத்தியையடையுங்காரணமாமான்மொய்
குழற்செய்யவாய்பசுந்தோள், வித்தகிசாவதானமாய்க்கேட்டி
யென்றிறைவிளம்பிடுமன்றே ... ... ... ... ... ... ... ... ...*

(இ-ள்.) என்றைக்கும் அழியாத - நித்யராகிய பரமசிவத்தை (நோக்கிப்) பார்வதியார் திருவடிகளிற் பணிந்துநின்று - அடியேனுக்குத் தேவரீர் -ப்ரம்ம நிஷ்டாசாதனத்தை - அநுக்ரகஞ் செய்தருள வேண்டுமென்று கேட்க,—சகத்துக்கெல்லாம் பிதாவாய் விளங்குகின்ற அப்பரமசிவமும் - அதற்கு ஆனந்தத்தையடைந்து-நெருங்கிய கூந்தலையுஞ்-சிவந்தவாயையும்-பசுமைபொருந்திய தோள்களையுங்-கியானத்தையுமுடைய உமையவளே! நீ கேட்டது வுலகத்தில் நிறைந்திருக்கின்ற ஆத்மகோடிகள் (பழிசேர்முத்திகளை நீக்கி) உண்மையறிவால் மோக்ஷத்தை யடைவதற்குக்காரணமாக இருக்கின்றது, (ஆகையால்) நீசாவதானமாய்க் கேட்பாயாகவென்று சொல்லுகின்றார் சுவாமி—(எ-று.) ஏ-ஏ-ஆல்-அன்று-ஏ- இவ்வைந்தும் அசைகள். மெய்யுணர்வா லென்றதனால் பழிசேர்முத்தி வருவிக்கப்பட்டது. *

(ப-ம்.) அண்டசராசரங்களெல்லாந்- தம்மிடத்தில்தோன்றித்தோன்றிஅழிந்தாலுந்-தாமெப்பொழுதும் அழியாமல் சமஸ்தமுந் தாமாயுந்தாமல்லவாயும்விளங்குகின்றகடவுளென்பார்.—நித்தனெனவும்,மெழுக்குண்டையில்-மறைப்புண்ட இரத்தினம்போல்-ஆணவத்தால் மறைப்புண்டுகிடந்தசர்வாத்மாக்களுக்குந்

